உ

ஸ்ரீ ராமஜெயம்

# அரங்கத்து அனுபூதி






நூலாசிரியர்

கோவிலூர் மரபு

பிர்மஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள்

ஸ்ரீரங்கம்

1988 விலை ரூ. 1




## சாற்றுக் கவி



வந்த வர்க்கெலாம் வாழ்வினை நல்கிடும்
மாட்சி யோடொளிர் ஸ்ரீரங்க நாதனே
முந்துற்றிப் பிரம்மானந்த ஸ்வாமிகள்
மொழிந்த வாமிரு அந்தாதி பூண்ருளார்
சிந்தை முற்றும் கவர்ந்தருள் செய்தநீ
செந்தமி ழ்த்திரு மாலைகள் நாடினாய்
அந்த மாமுனி வேந்தர் உனக்கிதோ
அளிக்கும் ஆரம் அநுபூதி சூடுவாய் 1

நெஞ்ச மென்னும்பூந் தோட்டம் அளித்தது
நிறைந்த அன்பெனும் நீரால் வளர்ந்தது
செஞ்சொல் என்னும் சீர்நலம் பெற்றது
தெய்வ பத்தியாம் நன்மணம் உற்றது
சஞ்ச லத்தைப் போக்கிப்ரும் மானந்த
த்தவச்சி ரேட்டர் கரத்தால் தொடுத்ததிங்
கஞ்சல் அஞ்சஎன் றாளும் அரங்கனே!
அழகு மிக்க அநுபூதி சூடுவாய்.

திருவரங்கம் }

கு. க. நரசிம்மன்
(சக்தி சரண்)

விஷ்ணு பரத்வ ஸ்தாபக தீரசிகாமணி

## வைஷ்ணவ ஸம்ப்ர வர்த்தக சம்பந்தர்

## R. நரசிம்மாசாரியார் முன்னுரை

மாசில் கல்வியும் எண்ணரும் கேள்வி ஞானமும் கணக்கில் ஆற்றலும் தெளிவுற்ற மறைமுடிவின் சீர்மிகு செம்பொருளும் நிறைந்த பெற்றியோராவர் உயர்திரு பிரம்மானந்த யோகிஸ்வாமிகள். பிரம்மானந்த சுவாமிகள் பொன்னரங்கம் என்னில் மயலே பெருகும் நெஞ்சுடையராய் அரங்கன்பால் ஆராதகாதல் கொண்டு வைகலும் வழிபாடு செய்துவரும் மாட்சிமை கொண்டவர். பண்டே வெண்பாஷம் கட்டளைக் கலித்துறையும் அந்தாதிபாடி முகில் வண்ணனாம் திருவரங்கனை தலைதுளுக்க வைத்து அதனால் பேரின்ப முற்ற அரங்கன் சீரருளால் அரங்கத்தநுபூதியென்னும் தேனும் பாலும் அமுதுமாகிய பாமாலை யாத்துள்ளார்.

இந்நூல் இவர் அரங்கன்பால் கொண்ட நேயமும் பத்தியும் தேனும் கனியும் கலந்ததுபோல் கலந்து அநுபவித்த அநுபவத்தை காவிரி நீர் போல் தெளிந்து படிப்பவர் உள்ளம் களித்து உருகும்படி நெஞ்சந் தன்னைப் பேரானந்தமாம் பிரம்மானந்தத்தில் சேர்ப்பதாகவுள்ளது. இவர் அத்வைத சமயமறிந்த செம்புலவர். ஆயினும் அக்கொள்கை இந்நூலில் குறைந்து பக்தியே விரவியுள்ளது.

இந்நூலை அனைவரும் படித்து திருவரங்க நாயகி - திருவரங்கன் தனிப்பெருங் கருணைக்கு இலக்காகி ஞாலம் புகழ வாழ இறைவனை எங்கள்மால் செங்கண் மாலை வணங்கி வேண்டி நிற்கிறேன்.

37-2

வித்வான் முத்தமிழ் மணி நல்லாசிரியர்
ஓய்வு பெற்ற தமிழாசிரியர்

**மஞ்சக்கொல்லை சுவாமிநாதன் அவர்கள்**

எழுதிய சாற்றுக்கவி.

குவலயம் போற்றும் கோவிலூர் மரபில்
வந்த பெருமான் பிரம்மானந்தன்
கல்வி ஞானம் கைவரப் பெற்றோன்
வேதாந்தக் கருத்தை விளக்கும் சீலன்
பிரம்ம கீதைக்கு பேருரை கண்டோன்
அஞ்ஞவதைப் பரணிக்கரும் பொருளுரைத்தோன்
பலதலம் சென்று பல்லோர் தமக்கு
பாடம் சொல்லும் பண்புடையாளன்
வண்டுவார் குழலி உடனுரை மாணிக்க-
வண்ணர் தமக்கு மருகலந் தாதி
படிப்பவர் மயக்கம் தீரும் வகையில்
பாடல் புனைந்த பல்கதிர் செல்வன்
செருகல் மறைந்த திருவருட் பெருக்கால்
மருகல் மாலை அளித்த அண்ணல்
புலவரை இரட்சிக்கும் தாருவே என்று
வாக்கின் மன்னர் அருணகிரி நாதர்
போற்றிய சிக்கல் சிங்கார வேலர்க்கு
அந்தாதிபாடிய அருட்கலைவாணன்
அச்சுதா அமரர் ஏறே என்றும்
ஆழ்வார்கள் போற்றிய அரங்கர்மீது
வெண்பா அந்தாதி விரும்பி புனைந்தோன்
பூழி வெங்கானம் பொலியச் சென்ற
இராம பிரான்மேல் தெள்ளு தமிழால்
பிள்ளைத் தமிழை பெருமையாய் படைத்தவன்
அரவணை தன்னிற் பள்ளிகொள்ளும்
அரங்கப்பெருமான் அருளை வேண்டி
கட்டளைக் கலித்துறை அந்தாதி தன்னை
அருளாற் பாடிய அரங்கற்கன்பன்
சும்மா இருசொல்லறவென் றருளரல்
பொருளைப் பொருளாக் கொண்டு புனைந்த

விஷ்ணு பரத்வ ஸ்தாபக தீரசிகாமணி

## வைஷ்ணவ ஸம்ப்ர வர்த்தக சம்பந்தர்

## R. நரசிம்மாசாரியார் முன்னுரை

மாசில் கல்வியும் எண்ணரும் கேள்வி ஞானமும் கணக்கில் ஆற்றலும் தெளிவுற்ற மறைமுடிவின் சீர்மிகு செம்பொருளும் நிறைந்த பெற்றியோராவர் உயர்திரு பிரம்மானந்த யோகிஸ்வாமிகள். பிரம்மானந்த சுவாமிகள் பொன்னரங்கம் என்னில் மயலே பெருகும் நெஞ்சுடையராய் அரங்கன்பால் ஆராத காதல் கொண்டு வைகலும் வழிபாடு செய்துவரும் மாட்சிமை கொண்டவர். பண்டே வெண்பாஷம் கட்டளைக் கலித்துறையும் அந்தாதிபாடி முகில் வண்ணனாம் திருவரங்கனை தலைதுளுக்க வைத்து அதனால் பேரின்ப முற்ற அரங்கன் சீரருளால் அரங்கத்தநுபூதியென்னும் தேனும் பாலும் அமுதுமாகிய பாமாலை யாத்துள்ளார்.

இந்நூல் இவர் அரங்கன்பால் கொண்ட நேயமும் பத்தியும் தேனும் கனியும் கலந்ததுபோல் கலந்து அநுபவித்த அநுபவத்தை காவிரி நீர் போல் தெளிந்து படிப்பவர் உள்ளம் களித்து உருகும்படி நெஞ்சந் தன்னைப் பேரானந்தமாம் பிரம்மானந்தத்தில் சேர்ப்பதாகவுள்ளது. இவர் அத்வைத சமயமறிந்த செம்புலவர். ஆயினும் அக்கொள்கை இந்நூலில் குறைந்து பக்தியே விரவியுள்ளது.

இந்நூலை அனைவரும் படித்து திருவரங்க நாயகி - திருவரங்கன் தனிப்பெருங் கருணைக்கு இலக்காகி ஞாலம் புகழ வாழ இறைவனை எங்கள்மால் செங்கண் மாலை வணங்கி வேண்டி நிற்கிறேன்.

37-2

வித்வான் முத்தமிழ் மணி நல்லாசிரியர்
ஓய்வு பெற்ற தமிழாசிரியர்

**மஞ்சக்கொல்லை சுவாமிநாதன் அவர்கள்**

எழுதிய சாற்றுக்கவி.

குவலயம் போற்றும் கோவிலூர் மரபில்
வந்த பெருமான் பிரம்மானந்தன்
கல்வி ஞானம் கைவரப் பெற்றோன்
வேதாந்தக் கருத்தை விளக்கும் சீலன்
பிரம்ம கீதைக்கு பேருரை கண்டோன்
அஞ்ஞவதைப் பரணிக்கரும் பொருளுரைத்தோன்
பலதலம் சென்று பல்லோர் தமக்கு
பாடம் சொல்லும் பண்புடையாளன்
வண்டுவார் குழலி உடனுரை மாணிக்க-
வண்ணர் தமக்கு மருகலந் தாதி
படிப்பவர் மயக்கம் தீரும் வகையில்
பாடல் புனைந்த பல்கதிர் செல்வன்
செருகல் மறைந்த திருவருட் பெருக்கால்
மருகல் மாலை அளித்த அண்ணல்
புலவரை இரட்சிக்கும் தாருவே என்று
வாக்கின் மன்னர் அருணகிரி நாதர்
போற்றிய சிக்கல் சிங்கார வேலர்க்கு
அந்தாதிபாடிய அருட்கலைவாணன்
அச்சுதா அமரர் ஏறே என்றும்
ஆழ்வார்கள் போற்றிய அரங்கர்மிது
வெண்பா அந்தாதி விரும்பி புனைந்தோன்
பூழி வெங்கானம் பொலியச் சென்ற
இராம பிரான்மேல் தெள்ளு தமிழால்
பிள்ளைத் தமிழை பெருமையாய் படைத்தன்
அரவணை தன்னிற் பள்ளிகொள்ளும்
அரங்கப்பெருமான் அருளை வேண்டி
கட்டளைக் கலித்துறை அந்தாதி தன்னை
அருளாற் பாடிய அரங்கற்கன்பன்
சும்மா இருசொல்லறவென் றருளரல்
பொருளைப் பொருளாக் கொண்டு புனைந்த

எந்தை அருணகிரிபோல் அநுபூதி
பாடிப்பணிந்து போற்றும் நோக்கால்
அரங்கத் தநுபூதி இயற்றி எம்மிடம்
காட்டிய போது என்தன் மனமும்
அரங்கன் மீது ஆர்வமிக் கூர்ந்து
சைவமெய் யடியார் பதிகம் போலவும்
ஆழ்வார்கள் அருளிய பாசுரம் போலவும்
பாடல் புனையும் ஆற்றல் பெற்ற
பிரம்மானந்தப் பெருமான் பாரில்
பன்னூறு ஆண்டு வாழ்ந்து பாடி
பத்தர்கள் உய்யும் வழியது காட்டி
வாழ்க என்றே வாழ்த்துதும் யாமே.

— சுபம் —

இங்ஙனம்

மஞ்சக்கொல்லை ஆர். சுவாமிநாதன்

ஸ்ரீ ராம ஜெயம்

# அரங்கத் தநுபூதி —காப்பு

சீராரும் மெய்யன்பர் சித்தத்தில் வீற்றிருக்கும்
பேராரும் மாமுகனே பேரருளால் நேராகி
தீயவினை யொழித்துத் தென்ன ரங்கன்தன்
புகழாம்
ஞேய அநுபூதி நிகழ்த்து.

## நூல்

திருமா மறைகள் தினமும் பரவும்
பெருமான் அரங்கன் பிரம்மன் அரனும்
ஒருமூ உருவாய் உயர்மா தவனே
வருவான் அருளால் மலராள் உடனே 1

உடனே வருவாய் உயிர்நா யகனே
இடனே அறியேன் இரங்காய் அரங்கா
நடனே எனினும் நலமே அருளும்
கடனே எனநின் கருணை புரியே 2

புரிவாய் அருள்நீ புகலொன்று மிலேன்
எரிவாய் எறும்பாய் இரவும் பகலும்
கரிவாய் தனிலுண் கரும்பாய் அரங்கா
திரிவாய் எனிலோ சிறப்பாய் முறையே

முறையோ முறையோ முருந்தாவெனமுன்
பொறையோ டழைக்கும் புனிதைக் கிரங்கி
நிறைகாத் தருளும் நிமலா அரங்கா
சிறையாம் பிறவித் திரைதீர்த் திரங்கே 4

இரங்காய் எளியேன் இறைவா வுனைநான்
கரங்கொண் டலரால் கருதித் தொழுதேன்
சிரங்கொண் டடியில் தினமும் பணிந்தேன்
அரங்கா அருள்வாய் அழியா அருளே 5

அருள்வாய் அரங்கா அடியேன் அடைந்தேன்
இருள்வா தனையோய் இயல்பாம் உணர்வால்
மருள்வா தனையால் மயங்கா தழியாப்
பொருளாய் இருக்கும் புலம் தந்தருளே 6

புலந்தந் துடலிற் பொருந்தா அறிவாய்
நலங்கண் டதுவாய் நடுநாயகமாய்
தலங்கண் டழியாத் தகவாய் இருக்கும்
பலந்தந் தரங்கா பயம்நீ தணியே 7

தணியா மயக்கம் தனித்துன் னருளால்
கணியாப் பிறவிக் கருவை யழித்துப்
பிணியா துமிலாப் பெருவாழ்வரங்கா
பணிவார்க் கருளும் பரிபூ ரணணே 8

பரிபூ ரணமாய் பலவாய் இருந்தும்
அரியாய் எவர்க்கும் அடியார் உளத்தில்
பிரியா திருக்கும் பெருமான் அரங்கா
சிரியேர்க் கருள்வாய்த் திரமாம் உணர்வே 9

உணர்வாய் ஒளியாய் உறுதிப் பொருளாய்
மணமாய் மலராய் மதியாய் விதியாய்
குணமாம் உளத்தில் குடியாய் அரங்கா
கணமும் பிரியாக் கதியானவனே 10

கதியாய் இருப்பாய் கழல்சேர்ந் தவர்க்கே
பதியாய் இருப்பாய் பசுவானவர்க்கே
விதியாய் இருப்பாய் வினையால் அரங்கா
மதியாய் இருப்பாய் மனத்திற் பிரிந்தே 11

பிரியா திருந்தும் பிரிவுற் றது போல்
சிரியோர் அயர்வர் திறமாய் அது வாய்
பெரியோர் அறிந்து பிரியா தனைத்தின்
கரியாய் அரங்கா கலங்கார் மனமே 12

மனமாய் நினைவால் வருமிவ் வுலகம்
கனவாய் அறிந்தோர் கருவாய்ப் பிறவார்
சினம்போய் அறிவாய் தெவிட்டா அமுதாய்
கனமாய் எனையும் கதிசேர்த் திலையே 13

சேர்த்துன் கழலில் திரும்பா நிலையாய்
பேர்த்தென் வினையை பிரியா வுணர்வாய்
பார்த்தால் உலகைப் பரமென் றுணர்த்தி
காத்தல் அரங்கா கடனாம் உனதே 14

உனதே உடலும் உயிரும் பொருளும்
எனதாய் மயங்கும் இருள்தீர்த் தருள்வாய்
மனதால் நினைப்பு மறப்பும் அரங்கா
கனவாய்த் தொடரும் கனவே தனையே 15

வேதா விதியை விலக்கும் விமலா
தாதா எனநான் சரண்வந்தடைந்தேன்
நாதா அரங்கா நயங்கண் டருள்வாய்
சீதா மகிழும் சீலநா யகனே 16

நாயகனென்றுன் நலங்கண்டடைந்தேன்
தாயக மென்னும் தயவாய் அரங்கா
மாய வனென்றுள் மயக்கா தெனையும்
தூய அருளால் துடைப்பாய் வினையே 17

வினையால் உடலின் விளைவோ அறியேன்
பினைபோய் அடையும் பிறப்பும் அறியேன்
உனையாய்ந் தறியேன் உயிருசலிடும்
எனையாள் அரங்கா இனியாம் துணையே 18

ஆமே துணையும் அழியாப் பதமும்
நாமே எனமுன் நடுநா யகமாய்
தேர்மேல் விசையன் தெவிட்டா அமுதாய்
தாமே மொழிந்தாய் தனிநா யகனே 19

தனிநா யகனே தவம்செய் திலனே
முனியாய் அழியா முதலும் அறியேன்
இனியான் அரங்கா இரவும் பகலும்
தனியாய் இருக்கத் தருவாய் சரணே 20

தருவாய் சரணம் தகவே யுடையாய்
திருமங் கையர்கோன் திருமந்திரத்தை
அருளால் அரங்கா அரிவாள் உருவப்
பெருமான் அருள்வாய் பிழைதீர்ப் பவனே 21

பிழைதீர்த் தெனையாள் பெருமான் அரங்கா
மழைநீ தடுக்க மலைவந் தெடுத்தாய்
அழைத்தா னெதனக் கபயம் கொடுத்தாய்
இழைத்தேன் அருள்வாய் இருள் தீர்ப்பவனே 22

இருள் தீர்ப்பவனே எளியேன் உளத்தில்
மருள்தீர்த் தரங்கா மதில்மேல் ஒளியாய்
பொருளொன் றெனவே புரணத் தறிவாய்
அருள்வாய் எனக்கும் அருள்மேலவனே 23

மேலோர்க் கருளும் விமலா அரங்கா
நாலேழ் உடல்மூன் றுயிர்நான் எனவே
நூலோர்ந் துணரார் நுகர்வார் வினையே
மாலோர் அறியா மறைநாயகனே 24

மறைநாயகனே மறைந்தோர் குறளாய்
நிறைமா வலிபால் நிலம்மூ வடியை
இறைவா அளந்தாய் இமையோர்க்களித்தாய்
முறையோ அரங்கா முனம்தோன் றிலையே 25

இலையோ இறைவா இரக்கம் சிறிதும்
நிலையோ அறியேன் நெறியோ அறியேன்
கலையோ அறியேன் கதிவந் தருள்வாய்
அலையா றிதுயில் அரங்கத் தமுதே 26

அமுதாய் அமரர்க் கடயோ கமுதாய்
அமுதா கிமெய் ஞானியருக் கரங்கா
அமுதாய் எனக்கன் புடையாய் திருவாய்
அமுதாம் மொழியில் அயர்ந்தாய் மதியே 27

மதியின் படியே வரும்வாழ் வெனவே
விதியின் படியே விலக்கும் அரங்கா
பதியின் செயலாய் பலவும் இருக்க
விதியின் செயலாய் விதித்தால் அழகே 28

அழகா அருளும் அரங்கா அபயா
நிழலாய் அடியில் நிலைசேர்ந் திலனே
குழகா இறைவா குறைதீர்த் திடுவாய்
இழகா மனத்தேன் எனையாள் பவனே 29

பவனம் மனம்போய் பரமாய் அமரும்
கவனம் நடுத்தார் கலர்கள் அறுவர்
எவனம் கெடுத்தார் இரங்காய் அரங்கா
புவனம் தனிலே புகல்நீ யெனக்கே 30

எனக்கும் அருளும் இறைவா அரங்கா
உனக்கே அடிமை உடலாம் உயிர்நீ
எனக்காம் வியட்டி இயல்பை அகற்றி
உனக்காம் சமஸ்டி உணர்வாய் நிலவே 31

நிலவாய் கதிர்கால் நிலம்நீர் கனல்வான்
உலகாய் உயிராய் உணர்வாம் அரங்கா
மலமூன் றொழித்து மதிமேல் ஒளியாய்
நலமாய் எனக்கும் நலந்தந் தவனே 32

தந்தவ னென்றும் தனியோர் அரசாய்
அந்தக னென்றும் அணுகா தருளால்
சிந்தை யிலென்றும் சிவமாய் அரங்கன்
அந்த மிலின்பம் அளித்தான் அவனே 33

அவனே இவனாய் அருமா மறைகள்
நவமாய் உரைத்தும் நலங்கண் டறியேன்
அவமே அலைந்தேன் அரங்கா அருள்வாய்
பவமே ஒழிக்கும் பரமெய் யுணர்வே 34

மெய்யுணர் வுற்று விருப்பற் றரங்கா
ஐயு ரவற்றே அழியா அரசாய்
செய்வ கைசெய்துத் திறமாய் அதுவாய்
உய்வ கைசெய்வாய் உணர்வாம் பரனே 35

பரனே அடியார் பரவும் அரங்கா
சுரநா யகனே துதிப்பார் துணையே
நரநா ரணனே நலியா தெடுக்கும்
கரந்தந் தருள்வாய் கருணா கரனே 36

கருணா கரனே கதியென் றடைந்தேன்
வருணாச் சிரம வழியொன் றறியேன்
திருநா யகனே சிரியோர்க் கருள்வாய்
உருநா மமிலா வுயர்போ தமதே 37

போதம் உணர்த்தும் பொருளைக் குரவோர்
பேதம் உணர்த்தும் பிழையால் அரங்கா
வேதம் உரைக்கும் விதமோ பலவாம்
வாதம் உரைக்கும் வழியோ அறிதே 38

அறிதே யுலகில் அருளைப் பெறுதல்
குறியோர்ந் துணரும் குறிப்பும் அறிதே
பொறிசேர்த் துவிதப் புலன்போய் அழியா
அறிவாய்ந் திருக்க அரங்கா நினையே 39

நினையேன் உனையே நிலையா வுலகம்
தனையே நினைத்து தவிக்கும் எனக்கும்
உனையே வுணரும் உணர்வே தருவாய்
எனையாள் அரங்கா இதமாம் முறையே 40

முறையோ அரங்கா முதுமைத் துயரால்
சிறையாம் உடம்பில் தியங்கும் எனக்கு
மறைவாய் இருந்தால் வழியென் றுணர்வேன்
இறைவா அருள்வாய் எழியேன் கதியே 41

கதியே எனவுன் கழல்வந் தடைந்தேன்
விதியே எனநீ விலக்கா தரங்கா
மதியே கொடுத்தென் மயக்கம் தவிர்ப்பாய்
பதியே அடியார் பவம்தீர்ப் பவனே 42

பவம்தீர்த் தருளும் பரனே இரங்காய்
தவம்செய் துருவன் தனைக்காத் தாசாய்
நவம்செய் துலகில் நடுநா யகமாய்
உவந்தே யருள்வாய் உயிர்நேர் உணர்வே 43

நேராய் உணர்வாய் நிலையாய்ச் சுகமாய்
ஓரா துயிர்கள் உளதாய் இலதாய்
தீரா வழக்காய் தெளியா தலைவர்
அரா அமுதாம் அரங்கன் உருவே 44

உருவாய் அரங்கா உதித்தால் ஒடுங்கும்
அருவாம் அறிவே அழியா தெனவும்
திருமா மறைகள் தெளிவாய் உரைத்தும்
பொருள் மூன்றுளதாய் புலம்பும் தரமே 45

தரமோ அரங்கா தனையாய்ந் தடைதல்
பரமோர்ந் தவர்தம் பதம் சேர்ந்தருளால்
சிரமாம் மறையில் திகழும் பொருளை
உரமாய் உணர்ந்தால் உணரும் வகையே 46

வகையாய் பலவும் மலைபோல் படைத்து
வகையாய் புசித்து மகிழ்வாய் அரங்கா
பகையாம் பசியால் பலவூர் திரிந்து
நகையா தருள்வாய் நமதா ளெனவே 47

ஆளாம் திருப்பா ணாழ்வார் தமையும்
சூளாமணியாம் சுடர்க் கோதைதனை
மீளா துடலை வினைமாய்த் தரங்கா
மாளாப் பதமாம் வழிதந் தனையே 48

வழிதந் தெனக்கும் மகளிர் மயக்காம்
சுழிவந் தழிக்காத் துணையாந் துரிய
விழிதந் தரங்கா வினையாம் பிறவி
குழிதூர்த் தெடுப்பாய் குணமா மலையே 49

மலைபேர்த் தெடுத்தான் வலிதோள் அரக்கன்
தலைபத் தறுத்தாய் சனகன் மகளை
தலைவா சிறைதீர்த் தருள்வாய் அரங்கா
நிலைதந் தெனையாள் நிறை கற்பகமே 50

கற்ப கமென்றுன் கழல் வந் தடைந்தேன்
பற்ப லவெண்ணிப் பதைக்கும் மனத்தை
தற்ப தமென்றும் தனதுரு வென்றே
நிற்ப தரங்கா நினக்காம் செயலே 51

செயலுன் செயலாய்த் தெளிந்தோர் அரங்கா
அயல்வே றணுவும் அசையா தெனவே
இயல்பாம் அனைத்தும் இயங்கும் செயலை
நயமாய் அறிந்தால் நலமாம் பதமே 52

பதமும் பொருளும் பலவும் உடலும்
விதமும் செயலும் வினையும் பயனும்
இதமும் சுகமும் இகமும் பரமும்
சதமும் அரங்கா தருநின் கழலே 53

கழல்சேர்ந் தரங்கா கதியே யடைவார்
உழலார் பிறந்தார் உயர்மா நிதியாய்
நிழலாய்க் குடைக்கீழ் நிலத்திற் கரசாய்
அழகாய் அருளால் அடைவார் உனையே 54

உனையே அரங்கா வுருகித் தொழுவோர்
நினையார் எதையும் நிலந்தோய்வதற்கு
நினையா நிலவுண்ணு நிலா முகிபோல்
எனையாய்ந் துணர்வாய் இருப்ப துமென்றே 55

என்றுன் அருளால் இருள்கோ சமதை
அன்றென் றறிந்தே யனைத்தும் அறிவாய்
நின்றென் நிலையாய் நிறைவாய் அரங்கா
ஒன்றென் றருள்வாய் உணர்வாம் நலமே 56

நலமே அருளால் நவில்நான் மறைகள்
பலமே பகரும் பரம்தான் அரங்கா
மலமும் சலமும் மறப்பும் அகல
குலமாம் தொழிலும் குலையா உணர்வே 57

உணர்வும் தொழிலும் உறங்கும் தரமாய்
குணமுன் றதனைக் குறியால் அறிந்தோர்
புணரார் பிறியார் புலம்பார் அரங்கா
உணர்வாய் இருப்பார் உயர்ந்தோர் புறகே 58

புறகே அடைந்தேன் புலையேன் பிழைக்கும்
அறசா தனநான் கருளால் உணர்வாம்
திறகே வலமாய் சிவமாய் நிலையாய்
பிறகே விளங்கும் பெருமான் அரங்கே 59

பெருமான் அரங்கன் பிறவான் இறவான்
அருவாம் அறிவாம் அழியாச் சுகமாம்
அருளாற் பணிவார்க் கருள் மாயையினால்
உருவாய் வருதல் உலகில் உளதே 60

உளதோ அருளா துயர்ந்தோர் உறவும்
உளதோ உலகில் உதவும் கருணை
உளதோ குணமும் உணர்வும் சுகமும்
உளதோ அரங்கா உயிர்க்காம் உயர்வே 61

உயர்வே அடைதற் குழைத்தேன் பலநாள்
அயர்வே அடைந்தேன் அரங்கா அறிந்தாய்
செயல்வே றறியேன் திருமார் புடையாய்
முயல்வோர்க் கருள்வாய் முதல் நாயகனே 62

முதல்மைத் திரியே முதிதை கருணை
உதசீ னமதாய் உயர்மா தவத்தால்
சதமாய் அகிலத் தனிநேர் அரசாய்
இதமாய் விளங்கும் இறைவன் அரங்கே 63

அரங்கா அடியேர்க் கருளா திருந்தால்
இரங்குஞ் செயல்வே றெழியேர்க் குளதோ
தரங்கண் டருளாத் தமையே யிகழ்வர்
பரங்கண் டடைந்தேன் பதம்தா இனியே 64

இனியான் உலகோர் இயல்போ மறந்து
கனிகாய் கிழக்கு கவர்ந்துள் மகிழ்ந்து
தனியாய் அழியாத் தவமாய் அரங்கா
முனியாய் அருள்வாய் முறையாம் அடைவே 65

அடையா தலைக்கும் அகப்பாம் பதனை
உடைவாள் உணர்வால் ஒழிப்பாய் அரங்கா
தடையைம் புலனும் சடமாமனம் போய்
கடையேன் அருளால் களித்தின் புறவே 66

இன்புற் றிருக்க இறைவா நினைத்தேன்
என்பற் றொழித்துள் இருள்போய்த் துரிய
அன்புற் றரங்கா அடியேன் பிழைக்கும்
உன்பற் றளிப்பாய் உயிருக் குயிரே 67

உயிருக் குயிராய் உணர்வுக் குணர்வாய்
செயிருக் கெமனாய் செயலின் பயனாய்
பயிருக் கமுதாய் பரவும் அரங்கன்
கயிரில் மணிபோல் கதியாம் தகவே 68

தகவே உடையாய் சகலம் துறந்து
சுகரே முதலோர் சுகமுற் றிருக்கச்
சுகமென் றிழுத்துச் சுடுமுக் குறுப்பை
இகமேல் விரும்பா தெனையாண் டிலையே 69

ஆண்டி லையென்னில் அரங்கா துணையார்
தூண்டிற் படுமீன் துயர்போல் துடித்து
வேண்டித் தொழுதேன் வினைமாற் றிலையேல்
மீண்டும் பிறந்தால் விரும்பேன் உனையே 70

விரும்பா திருந்தால் விடுத்தெங் குறைவாய்
திரும்பா நிறைவாய் தெவிட்டா அமுதாய்
பெரும்பே றளிக்கும் பெருமான் அரங்கா
இரும்பா மனத்தை யிளக்குன் செயலே 71

செயலும் பொருளும் செயலோன் பயனும்
அயல்வே றிலதாய் அருள்வாய் அரங்கா
முயலும் செயல்போய் முதலும் முடிவும்
மயல்தீர் பதமே மதியின் தெளிவே 72

தெளிவே அறத்தின் திறமே அடியார்க்
கெளியோய் அரங்கா எதிர்க்கும் பகையை
களியே அடக்கி கதிநீ கொடுக்கும்
அளியே அறிந்தே அடைந்தேன் சரணே 73

சரணம் அடைந்தேன் தயவால் அரங்கா
கரணம் பதிநான் கதனைக் கடந்துத்
திரணாய் உடலைத் தெரியா திருந்தால்
மரணம் அடையாப் பெரு வாழ்வியல்பே 74

இயல்பாய் இருந்தாய் இதயக் குகையில்
மயல்போய் உணர்ந்தார் மகிழ்ந்தின் புருவார்
செயலாய்ந் தறியார் திரிவார் பிறந்தே
புயல்நேர் அரங்கா பொழியின் புருவே 75

உருவாய் அருளால் உகந்தோர்க் கருளி
அருவாய் மனத்தில் அறிவாய் விளங்கி
குருவாய் வருவான் குறை தீர்ப்பதர்க்கே
பெருமான் அரங்கான் பிறியா வுணர்வே 76

உணர்வாம் அரங்கா உலகம் அழிந்தால்
புணரா துதரக் குகையிற் புரப்பாய்
குணமூன் றறியாக் குறியாய்ந் தறிந்தோர்
உணர்வாய் இருக்கும் உயர்ந்தோர் மனமே 77

மனமாம் அரவில் மணிபோல் துயில்வோய்
சினமே முதல்தீக் குணம்போய் ஒழித்து
நனவே கனவாய் நலமாய் உணர
இனமும் அரங்கா இரக்கம் இலையே 78

இரக்கம் இலதோர் இரண்ய னுடலை
உரக்கச் சிரித்துன் உகிரால் பிளந்தாய்
அரக்காய் உருகி அழைக்கும் சிசுவை
புரக்கும் அரங்கா புர நா யகனே 79

புர நா யகனே புனிதா அரங்கா
அரணேழ் மதில்மேல் அழகியசிங்கர்
சிரகோ புரம்செய் சிலர்தம் பொருளை
சுரகற் பகம்போல் சொரிந்தார் உளரே 80

உளரோ உயிருற் றுயிரற் றவர்போல்
புளகாங் கிதமாய் புவியிற் புரண்டுத்
துளவார் அரங்கன் துணைத்தாள் கதியாய்
அளவற் றுருகல் அருளின் செயலே 81

செயலாய்ந் தாங்கா தெளிவாய் திரமாய்
முயல்வார் அடையும் முதல்நா யகனே
கயல்வேல் விழியார் கனலும் கொதிங்கி
இயல்பாய் இருக்கும் இடம்வந் தியம்பே 82

இயம்பும் மறைகள் இயல்பாம் உனையே
சுயமாய்த் தொடராச் சொருபம் தடத்தம்
வியமாம் அதத்வா விருத்தி யதனால்
நயமாய் அரங்கா நவிலும் படியே 83

நவிலும் தரமோ நரர்நா வரங்கா
செவிக்கண் அரவும் திரந்தா யிரம்வாய்
நவிலா தயர்வால் நயந்தைத் தலையாய்
புவியிற் படுக்கும் புதுமை யிதுவே 84

இதுவே யதுவாய் இறைவன் எதிபோல்
அதுவாய் மனம்போய் அமர்தற் கருள்வாய்
பொதுவாய் அனைத்தின் புருவாய் அரங்கா
எதுவாம் அதுவாய் இருந்தாய் எழுந்தே 85

எழுந்தாய் நடந்தாய் இருந்தாய் கிடந்தாய்
தொழுந்தம் அடியார் துயராம் பிறப்பில்
அழுந்தா தெடுக்கும் அரங்கத் தொழிலோய்
கொழுந்தாய் குழைந்தேன் குணமே குறியே 86

குறிச டுலிங்கக் குறிகேட் டிடுதல்
பிறிவைப் பிரித்துப் பிறியா திருக்கும்
நெறியே மனனம் நிதித்யா சனமே
அறிவாய் மனம்போய் அமரும் அரங்கே 87

அமரும் அரங்கே அழியாப் பதமாம்
நமதென் றரங்கா நடுக்கா விரியுள்
அமரர் பரவும் அரவின் அணையோய்
தமரென் றருள்வாய் தனைச்சேர்ந்திலரே 88

சேர்ந்துன் னடியார் திருத்தாள் பரவத்
தேர்ந்துன் னருளால் திறமாய்த் தெளிவால்
ஓர்ந்துன் பெருமை யுலகோர் அறிய
பேர்ந்தின் றெழுவாய் பெருமான் துயிலே 89

துயிலா துறங்கும் துறைசொல் லரங்கா
மயிலா டுவதால் மதிதோய் பொழில்சூழ்
குயில்கூ விடமான் குழலோ சையினால்
அயிலா தனைத்தும் அசைவாய் இலதே 90

வாயே குளறா வகையே அரங்கா
நாயேன் இடத்தில் நமன் வந்திடுநாள்
நீயே துணையாய் நிலையாய் இருந்து
தாயே அனையாய் சரண்காத் தருளே 91

காத்துன் னருளால் கதிசேர்த் திலையேல்
பூத்தும் உதிர்ந்த புலம்போல் அரங்கா
கூத்தாய் முடியும் குறைதீர்த் தருள்வாய்
நீத்தும் பிரியேன் நெடுவா னெனவே 92

வானென் றிடமாய் வளிபோல் வலியாய்
மீனென் றெழுந்தான் விதிக்கூற் றொழித்தான்
தானென் றறிவாய் தனிநாயகமாய்
தேனென் றரங்கன் தெவிட்டா னெனக்கே 93

எனைத்து வலட்சியமென தறிவே
உனைதத் பதலட்சியமாம் அறிவாய்
தனையே அறியும் தகவே அரங்கா
பினையோர் நெறியும் பிதற்றல் வெறிதே 94

வெறிபோய் விபுவாகி விரோ தமிலா
தறிவாய் பிறிவற் றதுவே இதுவாய்
குறியா திலங்கும் குறையா நிறைவே
செறிவாய் அநுபூ தியரங் கிதுவே 95

இதுவே இயல்பாய் இறவாப் பதமாய்
பொதுவாய் அனைத்தின் புருவாய் அசையா
எதுவாய் எதற்கும் இடமாய் இலங்கும்
அதுவே அரங்கத் தநுபூதியதே 96

அதேக வெளியாய் அடி முடிவின்றி
சிதேக ரசமாய் சிவமாய் அரங்கம்
விதேக வுணர்வாய் வெறிபோய் அமுதாய்
இதேக மதிலே இறவாப் பதமே 97

பதம்வந் தடைந்தார் பலர்வந் தழைத்து
சுதனாய் அருகில் சுரநாட் டரசாய்
இதமாம் அனைத்தின் இதயத் துணர்வாய்
நிதமாம் அநுபூ திநிலை யரங்கே 98

நிலையாம் அரங்கே நெறியாய் விளங்கி
அலையாய்க் கடலாய் அசையா விளக்காய்
குலையா அநுபூ திகுறி யுணர்வாய்
தலையா விளங்கும் தனிப் பிரமமே 99

பிரமத் துணர்வை பெறுவார் அருளால்
உரமுற் றநுபூதியுயர் அலங்கல்
அரங்கர்க் கணிந்தேன் அடியேன் உளமாம்
புரமுற் றிலங்கும் புரணத் திருவே

## நூற்பயன்

அரங்கத் தநுபூதி யாரணத்தின் சாரம்
பிரம்மானந் தத்தின் பெருக்காம் – திரவுணர்வாய்
ஆய்ந்தறிந்து நூறுரைப்பார் அந்தமிலா ஆனந்தம்
தோய்ந்திருப்பார் என்றும் தொடர்ந்து.